ஸ்ரீ:

ந்ருஸிம்ஹப்ரியாவென்னும் அஹோபிலமட பத்ரிகையின் 1960௵
ஜூன்மாத ஸஞ்சிகையில் ப்ரகரமாகியிருக்கும்
திருமடல் வியாஸத்தைப்பற்றி

ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் அளித்த

# உபதேசவிம்சதி

ஸ்ரீராமாநுஜன் வெளியீடு

கிடைக்குமிடம்:
க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்

இதன் விலை 40 nP.

சார்வரி ௵ ஆனி விசாகம்
1960

Printed at the KUMARAN PRESS, Madras-1.

ஸ்ரீரஸ்து

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

## ந்ருஸிம்ஹப்ரியா வியாஸமொன்றைப்பற்றி

ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம்

### அண்ணங்கராசாரியர் அளித்த

# உபதேசவிம்சதி

## — முன்னுரை —

நிகழும் சார்வரி௵ ஆனி௴ க்ருஷ்ணசதுர்த்தி முதலாகச் சில நாள் ஆந்த்ர ப்ரதேசத்தில் கார்யவசாத் ஸஞ்சரிக்க ப்ராப்தமாயிற்று நமக்கு. 1960௵ ஜூலை௴ ஸஞ்சிகையான ந்ருஸிம்ஹப்ரியாவை இவ்வழியிடையில் கிடைக்கும்படி யனுப்பிவைத்தாரொருவர். அவரை இன்னாரென்றறியோம். நாம் ந்ருஸிம்ஹப்ரியாவைப் பார்ப்பதை வெறுத்துவிட்டுப் பல வருஷங்களாயின. அது நமக்கு வருவதும் 7, 8 வருஷகாலமாகவே நின்றுவிட்டது. இப்படியிருக்க இப்போது இது யாரால் எதற்காக அனுப்பப்பட்டதென்று தெரிந்துகொள்ள முடியவில்லை. உள்ளே பிரித்துப் பார்த்தபோது திருமடலென மகுடம் பூண்ட வியாஸமொன்று ஒரு வைதண்டிக பண்டிதர் பெயரால் ஏழு பக்கம் வெளிவந்திருப்பது காணலாயிற்று. அவரோ அவரைச் சார்ந்தவரோ இப்பத்திரிகையை அனுப்பியிருக்கக்கூடுமென்று கருதலாயிற்று. சிறிய திருமடலை நாற்பது பாட்டாகப் பிரித்துக் காட்ட இதில் முயற்சி கொண்டிருக்கிறாரவர். பஞ்சாங்கங்களில் திதி நக்ஷத்திரங்களுக்குப் புச்சம் காண்பதுபோலக் கிழமைகளுக்கும் புச்சம் காட்டவேணுமென்று கருதிய ஒருவர் ஞா. 11—17, தி. 37—6, செ. 53—46, பு. 7—50, வி. 59—49, வெ. 56—53, ச. 51—32 என்றிப்படியெழுதிவைத்து அச்சிட்டாராம். அக்கதையையே இதிற் பூட்டுகிறாரவர்.

நமக்குக் கிடைத்திருப்பது மேலே குறித்த ஒரு ஸஞ்சிகையே. இதில் 'சென்ற ஸஞ்சிகையின் தொடர்ச்சி' என்று தொடங்கியிருக்கிறது. இதில் சிறிய திருமடல் முடிவு பெற்றிருக்கின்றது. மேற்பகுதிகள் கிடைக்கும்போது அவற்றை ஆராய்வோம். தற்காலம் கிடைத்திருக்கின்ற ஸஞ்சிகையைமட்டும் இப்போது ஆராயப்புகுகின்றோம். ... ... ... ...

— முன்னுரை முற்றிற்று —

# உபதேசவிம்சதி தொடக்கம்

ஆரம்பத்தில் இவர் என்ன ப்ரதிஜ்ஞை செய்திருக்கின்றாரென்பதைத் தெரிந்துகொள்ளவில்லோம் ஆரம்ப ஸஞ்சிகை கிடைத்திலாமையால். சிறிய திருமடல் முடிக்கப்படும்போது இவர் எழுதியுள்ள ஆச்சரியமான வாக்கியங்களை முன்னம் ஆராய்வோம். இவருடைய ஹிதார்த்தமாக இவர்க்கு இருபது உபதேசங்கள் அளிப்பதாக ஸங்கல்பித்தோம். ஒவ்வோருபதேசத்தையும் இவர் நன்கு ஆராய்ந்து நெஞ்சில் தேக்கிக்கொண்டு உய்வது உரியது.

> மேலே 4 என்று லக்கமிட்ட வாக்ய ச்ரேணியை முன்னம் வாசித்துப் பார்த்தால் இவர்க்கு உபதேசமளிப்பதும் இந்த வியாஜத்தினால் உலகத்தைத் தெளிவிப்பதும் மிக அவசியமே யென்று யாவருங் கொள்ளலாகும். ஆகவே முன்னம் அதை வாசிக்க.

## ஸ்வாஜ்ஞாநாஜ்ஞானம் மிகவும் அநர்த்தாவஹம்

1. தம்முடைய புத்திக்கும் போதுபோக்குக்கும் நிலமல்லாத விஷயத்தில் லேகனப்ரவ்ருத்தி கொள்வது விவேகிகளுக்கு உரியதன்று. 'தமிழ்ப்ரபந்தந்தானே; நாம் பேசுவது தமிழ்தானே; நமக்கிது நிலமல்லாததோ?' என்று நினைத்து இவர் இத்தகைய விஷயங்களில் இறங்குவது மஹத்தான ஸாஹஸம்; மஹீயஸ்ஸான அபசாரம். இங்ஙனே நாம் எ[illegible] வெறும் ஆக்ரஹத்தினாலோ அஸூயையினாலோ அன்று என்பதை ஸூசிப்பித்தேவிடுவோம். தம்முடைய மதத்தில் விவேகிகளும் வித்வான்களும் பலர் இல்லாமற்போகவில்லை. இவர் தாமெழுதுமவற்றை அவர்களுக்குக் காட்டி அச்சிட அனுப்பியிருப்பரேல் இத்தனை கேடு இராது. அஜ்ஞானம் என்பது எவர்க்கு முள்ளதே. ஆனாலும் ஸ்வாஜ்ஞாநாஜ்ஞானமென்பது மிகவும் அநர்த்தாவஹம்—என்று ஒரு ரஸிகர் எழுதியுள்ளார். அதற்கு இவர் ப்ரதம நிதர்சபூமி. இனி இவர்தாம் எழுதுமவற்றைச் சிறந்த விவேகிகளான சில வித்வான்களுக்குக் காட்டிப் பரிஷ்கரிப்பித்து அச்சிட அனுப்புகவென்று முதலுபதேசம்.

## அஸப்யவாக் ப்ரயோகம் காட்டுதல்

2. சிறிய திருமடலுரையை முடிக்குமிவர் "என்று தன் தீர்மானத்தைக் கூறிமுடித்தாள்" என்று முடித்திருக்கிறார். நமது ஸம்ப்ரதாய நூல்களில் தீர்மானமென்கிற சொல்லை எங்கேயாவது கண்டிருக்கிறீர்களா? நியாய ஸ்தானங்களில் வழங்குஞ் சொல்லன்றோ இது. 'தன்னுறுதியைக் கூறிமுடித்தாள்' என்றோ, 'என்று உறுதியிட்டுத் தலைக்கட்டினாள்' என்றோ எழுதவறியாத

யிவர் இத்தகைய விஷயங்களில் தலையிடுவதற்கு மிகமிக வெள்கவேணும். இப்படிப்பட்ட க்ராம்ய வார்த்தைகளைப் பெரும்பான்மையாகப் பெய்திருக்கு மிவர்க்கு இவ்வுபதேசம் மிகவும் அவசியமும் உபாதேயமுமாகும்.

## பீதியும் லஜ்ஜையும் சிறிதுமில்லாமை

3. 'இப்படி இப்பிரபந்தத்தில் பழைய ஸம்ப்ரதாயப்படி நாற்பது பாட்டுக்களிருக்கின்றன' என்கிறார். பழைய ஸம்ப்ரதாயமென்கிற வார்த்தையினால் பாமரனும் வஞ்சிக்கப்படமாட்டான். ஸம்ப்ரதாயமென்கிற உதார கம்பீர மதுரவாசகத்தைக் கையாள்வதற்கு இவர் ஸர்வாத்மநா அநதிகாரி. இவர் பிரித்துக் காட்டியிருக்கிறவகை பண்டிதர்களோடு பாமரர்களோடு வாசி யற யாவரும் அருவருக்கத்தக்கது. "மற்றெனக்கிங் காரானும் கற்பிப்பார் நாயகரே"—இது ஒரு பாட்டு என்கிறார். "எண்ணருஞ்சீர்ப் பேராயிரமும் பிதற்றி"—இது ஒரு பாட்டு என்கிறார். விவேகிகள் சிரிப்பர்களே யென்கிற பீதியும் லஜ்ஜையும் தாபமும் இல்லாமை என்னே! "தாராளைத் தாமரை போல் கண்ணனை யெண்ணருஞ்சீர்" என்பது ஓரடி. "பேராயிரமும் பிதற்றிப் பெருந்தெருவே" என்பது மற்றோரடி. ஓரடியையும் ஒழுங்குபடாகக் கொள்ளாமல் முன்னே சில சொற்களைத் தள்ளியும், பின்னே சில சொற்களைத் தள்ளியும் யதேஷ்டமாக வொரு துண்டை யெடுத்து 'இதுவொரு பாட்டு' என்று கூசாமல் எழுதுமிவர் தம்மையொரு மஹர்ஷியாக நினைத்திருக்கின்றார் போலும். "மற்றெனக்கிங் காரானுங் கற்பிப்பார் நாயகரே" என்பது ஒரு பாட்டு—என்றதிலும் இதே அவத்யமுள்ளது. கறியமுது தளிகை செய்யக் கத்தரிக்காய் பூசணிக்காய் முதலியவற்றைக் கைபோனபோக்கில் சிறிதும் பெரிதுமாய்த் திருத்திப் பொகடுவதுபோல் எப்படி பிரித்தாலும் நம்மைக் கேட்பாரில்லையென்றும், நம்மை யுகந்துகொள்ள ஓர் அசட்டு வகுப்பு இருக் கின்றதென்றும் நினைத்திருக்குமிவர் அந்நினைவை விட்டொழித்தாகவேண்டும்.

## ஸர்வாத்மநா அஸம்பத்த ப்ரலாப கண்டனம்

4. "அடிகளின் சீர்களை யெண்ணி இலக்கணப்படி முழுவதும் ஒரே பாட்டு என்பது யுக்தமானாலும்" என்கிறார். அந்தோ! இந்த முழுமோசமான வார்த்தையை உற்றுநோக்க இவருடைய வகுப்பில் ஒரு விவேகியுமில்லையா? 'அடிகள்—சீர்கள்—இலக்கணம்' என்கிற வாக்குக்களைமட்டுங் கண்டு 'இவர் பெரிய இலக்கணப்புலவர் போலும், அகத்தியர் போலும்' என்றெண்ணிக் கொள்ளுமவர்களே இவரது வகுப்பில் மலிந்துள்ளார்கள்போலும். "அடிகளின் சீர்களை யெண்ணி" என்றால் என்ன பொருளையா! சீர்களை யெண்ணுவதற்கும் பாட்டு லக்கத்தை நிர்ணயிப்பதற்கும் என்ன ஸம்பந்தமையா? இம்மடலில் ஒவ்வோரடியிலும் நான்கு சீர்கள் எற்றக்குறைவின்றி யிருக்கின்றன. ஈற்றடி யொன்றுமட்டும் முச்சீர் கொண்டது. மற்றையடிகள் யாவையும் நியமேந

நாற்சீர் கொண்டவை. இடையிடையே இவர் அஜ்ஞானத்தாலும் அந்யதாஜ்ஞானத்தாலும் தவறான பாடங்களை யெழுதியிருப்பதனால் அவ்விடங்களில் சீர்கள் ஏறுவதும் குறைவதுமுண்டு. அதைப்பற்றி மேலே விவரிப்போம். இங்கு அந்த சர்ச்சை வேண்டா. நியதமாக ஒவ்வோரடியும் நாற்சீர் கொண்டிருக்க அடிகளின் சீர்களை எண்ணுவது எதற்காக? அங்ஙனம் சீர்களை யெண்ணிப் பார்த்துவிட்டால் முழுவதும் ஒரே பாட்டென்று தேறிவிடுமோ? திருவந்தாதியிலும் மற்றைப் பிரபந்தங்களிலும் சீர்களை எண்ணிப்பார்த்தே இவர் பாட்டு லக்கத்தை நிர்ணயிப்பவர் போலும். இப்படி லீலோத்பாடிவாநரத்வத்தை அடிக்கடி புதுப்பித்துக் கொள்ளும் முயற்சியை இனி அறவே விட்டிடுக.

## தவறுகளை உள்ளபடி யொப்புக்கொண்டால் உய்யலாம்

5. “அடிகளின் எதுகையை நோக்கி” என்றெழுதுவதற்கு மருண்டு சீர்களை யெண்ணியென்று கைத்தவ[illegible] எழுதிவிட்டேன் என்பீரேல், எழுதியுள்ளது முழுவதும் கைத்தவ[illegible]மென்று உள்ளபடியொப்புக்கொண்டு உய்ந்துபோவது நலம். தவறல்லாதது ஒன்றுகூட இல்லையே. சோம்பலை விட்டு முழுவதையுமெடுத்துக் காட்டவன்றோ முன்வந்திருக்கின்றேன். நான் ஸத்வாரகமாகவும் அத்வாரகமாகவும் வெளியிட்டுள்ள உமது அவத்ய ராசிகளில் இதுகாறும் ஒன்றுக்காவது நீர் மறுமாற்ற முரைத்ததுண்டா? நவம் நவமாக அவத்யங்களை யடுக்கி அபஹாஸ்யராய் நிற்கிறீர். போனவை போகுக. இப்போதாவது நேரான விடைகூறி உய்வீராக.

## வாய் திறக்கவுண்டோ வழி?

6. “முழுவதும் ஒரே பாட்டென்பது யுக்தமானாலும் வாக்யங்கள் பல இருப்பதுபோல் அநுஸந்தானத்திற்கேற்ப பூர்வாசாரியர்கள் பலவாகப்பிரித்து எண்ணிக்கையிட்ட பாட்டுக்கள் பல இருப்பதிலும் விரோதமில்லை” என்கிறீர். இருமடலென்றால் கறுப்பா சிவப்பா? எப்படியிருக்குமது? என்றுகூட ஜன்மப்ரப்ருதி யறியாதவர் “அநுஸந்தானத்திற்கேற்ப” என்பதும், “பூர்வாசார்யர்கள் பலவாகப் பிரித்து” என்பதும் அத்யந்த ஸாஹஸம். திவ்யப்ரபந்த கோஷ்டி அவைதிகமென்று காணக்கூசி முட்டாக்கிட்டுத் தலைமறைந்து இடக்குமவர் ‘அநுஸந்தானத்திற்கேற்ப’ வென்று வாய்திறக்கவும் வழியில்லையே. இப்போதிவர் காட்டியிருக்கிற லக்கப்படி எந்தவூரில் யார் அநுஸந்தானம் செய்கிறாரென்று கேட்டால் வாய்திறக்கவுண்டோ வழி. ‘இது ஆராய்ச்சிக்கு வரப்போகிறதோ!’ என்னும் துணிவினால் அர்வாசீனரான பிரபந்தஸாரகாரரொருவர் எழுதிவைத்ததை ‘பூர்வாசார்யர்கள் எண்ணிக்கையிட்ட’தாகக் காட்டுமிவருடைய மருள் அல்லது விப்ரலிப்ஸை நித்யஸ்ரீர் நித்யமங்களமாக விளங்குக.

## எதிரியின் ப்ரமாணலேசமுமற்ற ப்ரலாபம்

7. ஒரு ச்லோகத்தை அல்லது ஒரு தண்டகத்தைப் பலவாகப் பிரிப்பதும், ஒரு செய்யுளைப் பலவாகப் பிரிப்பதும் செய்து விட்டால் கேட்பாரார்? என்று இவர் நினைத்திருப்பது மிகத் தவறு. திருவெழுகூற்றிருக்கையையும் இங்ஙனே பலவாகப் பிரிக்கச் சிலர் முன்வந்தால் அதையும் இசைய வேண்டியதுதானே? 'வ்யபதிஷ்டர்களான ஆசாரியர்கள் பிரித்தால் இசைய வேண்டியதே' என்னில்; அந்தச் செயல்களில் வ்யபதிஷ்டர்கள் ஒருகாலும் தலையிடார்கள். ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் ஸ்மார்த்த பாடம், ஸ்ரீவைஷ்ணவ பாடமென்று பாடபேதமுமுண்டு. அக்ஷரங்களில் பேதம் தவிர விச்சேதத்திலும் பேதமுண்டு. இவை அவிசால்ய ப்ரமாணஸித்தமேயல்லது தாந்தோன்றிப்படியன்று. இங்ஙனே யெடுத்துக்காட்டக் கூடியவை பலவுண்டு. திருமடல் விஷயத்தில் இவர்களுடைய ஸ்வச்சந்தப்படிக்கு ஒரு ப்ரமாணமும் தேறாது. வீம்பான ஆக்ரஹம் விட்டுத் தொலைக்கத்தக்கதத்தனை.

## நெடுநாள் முன்னமே நாமெழுதியிருப்பது

8. "ஸம்ப்ரதாயாந்தரத்திலும் இதை அங்கீகரித்தாகவேண்டும்" என்றெழுதுகிறீர். ஸம்ப்ரதாயாந்தர சப்தத்தாலே எந்த ஸம்ப்ரதாயத்தை விவக்ஷிக்கிறீர்? தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தைத்தானே. அதில் திருமடல்கள் பல பாட்டுக்களாகப் பிரிக்கப்படுவது உண்டானால் ப்ரபந்தஸாரத்தின்மீது அவத்யம்கூற ப்ரஸக்தியேயிராதே. இதைப்பற்றி எத்தனை தடவை எழுதியாயிற்று. நாம் [illegible]வ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை யெழுதத் தொடங்கும்போதே [அ[illegible] 46 ஆண்டுகட்கு முன்னமே] இவ்விஷயத்தை அலசியலசி யெழுதியிருக்கிறோமே.

> "இப்போது அச்சிடுவிக்கப்பட்டுள்ள ஆழ்வார்கள் வாழித் திருநாமங்களை அயுக்த ஸர்வ பௌமரான அப்பிள்ளை யருளிச்செய்தாரென்பர் இலக்கண நெறியறியாதார்" என்றும்,

> "அவ்வாழித் திருநாமங்களில் இலக்கண நெறிக்கு இணங்காத அம்சங்களைக் கூறியிருப்பதும் தவிர அவற்றிலுள்ள பல அடிகள் யாப்பிலக்கணத்திற்கு எதிராகக் காணப்படும்" என்றும்,

"இம்மூன்றில் பாட்டிருநூற்றிருபத்தேழளித்தான் வாழியே" "இலகு திருவாய்மொழி யாயிரத் தொருநூற்றிரண்டுரைத்தான் வாழியே" என்கிற அஸம்பத்தங்களான அடிகளையெடுத்துக்காட்டி

> "இலக்கணம் படியாத சிலர் எழுதிவைத்த இவ்வாழித் திருநாமங்களை அப்பிள்ளை யருளிச்செய்தாரென்பது அஸாது" என்றும்

1914-ஆம் ஆண்டில் எழுதிப் பிரசுரம் செய்திருக்கிறேன். ஆசார்ய பீடஸ்தர்களில் ஒருவரும் திருமடல்களைப் பலபாட்டுக்களாகப் பிரிக்கவில்லை என்பதை நாம் பலகாலுமெழுதிப் பிரசுரம் செய்திருக்க, தம்முடைய கல்பனாக் ஜாலத்தையே புந: புந: பரப்பிக்கொண்டிருப்பதில் பயனென்கொல்? சில பாமரர்களையாவது வஞ்சித்து விடுவோமேயென்று நினைப்பது படித்தவன் பணியா?

## அத்யந்த மநுசிதப்ரலாப கண்டனம்

9. “இரண்டு ஸம்ப்ரதாயங்களையும் சேராத தனித்த இந்நாள்வாதம் த்வேஷத்தினாலும் தூஷண ருசியினாலும் ஏற்பட்ட வாதம்” என்கிறீர். அந்தோ! இது யாரை வஞ்சிக்க? இந்நாள் வாதமன்றிது. நமக்கு சைதந்யமுண்டான அந்நாள் தொடங்கி இந்த பரமார்த்தம் வெளியிடப்பட்டு வருகின்றதை உலகமறியும். த்வேஷமும் தூஷணருசியும் மானிடர்களுக்கு அஸம்பாவிதமல்ல, ஸம்பாவிதமே. பேர்க்கவும் பேராத ப்ரமாணங்களைக்காட்டி, மறு வாய்திறக்க இடமின்றிக்கே விஷயங்களை நிரூபிக்கின்ற நம்மைப்பற்றி அவலீலையாக எழுதுவதற்கு நீர் அதிகாரியல்லீர். த்வேஷமிருப்பினும் தூஷண ருசியிருப்பினும் அசாஸ்த்ரீயமும் அஸம்பத்தமுமான விஷயங்களை எழுத ஒருகாலும் நெஞ்சாலும் நினையோம். இதுகாறும் நாமெழுதி வெளியிட்டுள்ள பலவாயிரக்கணக்கான விஷயங்களில் ஒவ்வொன்றும் அசைக்கவும் முடியாத நிலையிலன்றோ விளங்குகின்றது. “த்வேஷத்தினாலெழுதுகிறார், தூஷணருசியினாலெழுதுகிறார்” என்றெழுத நீர் தவிர வேறொருவர் நெஞ்சாலும் நினையாரே. ப்ரதாபருத்ரீயத்தில் “காகநிந்த்ரோ ந ம்ருஷ்யதி” என்று தலைக்கட்டும் சுலோக மொன்றுண்டு. அதில் “பரிஹாஸேப்யநௌசித்யம்” என்றது “உபாலம்பேப்யநௌசித்யம்” என்றதற்கு முபலக்ஷணமாம். ப்ரமாணங்களைக் காட்டி நம்மை வாய்மூடுவிக்கமாட்டாத நீர் த்வேஷியென்றும் தூஷணருசியுக்தரென்றும் எழுதிவிடுவதனால் என்னாகுமந்தோ!

## விலக்ஷணவ்யக்திகளிருவரின் ப்ரசம்ஸை

10. ஸ்ரீஉ.வே. திருக்குடந்தை கண்ணனென்று ப்ரஸித்தராய் விளங்கும் ஸஹ்ருதய ஸஹ்ருந்மணியானவர் திவ்யப்ரபந்தத்தில் நல்ல விரகர், தென்னாசாரியர்களிடத்தில் ஹார்த்தமான அபிநிவேசமும் ஆதரமும் கொண்டவர். பிரபந்தஸாரத்திற்கு அவத்யம் நேராமல் காத்துக்கொள்ளவேணுமென்னும் காதலுமுடையவர். ஆனாலும் நெறிதவறிப் பேசார், எழுதார். அவாச்யங்களைச் சொல்லிப் பரமப்ரதாரணம் செய்யார்; செய்ய நினையார். ஸ்ரீஉ.வே. ஒப்பிலியப்பன் ஸந்நிதி நவநீதம் ஸ்ரீராமதேசிகாசார்யரும் இத்தகைய ப்ரசம்ஸைக்கு மிகமிக உரியவர். திருமடல் விஷயத்தில் இவர்கள் எழுதவேணுமென்று நான் ஆசைப்பட்டு அவ்வாசையை வெளியிட்டுமிருக்கிறேன். “அச்

வத்ஸாமா துருத: குத்ஸ:" என்றுங் கலந்தயாகக்கூட இந்த ஸம்ஸ்க்ருதயர் களுக்கு அஸ்தாநேப்ராஸ்க்ருத்திருசி விளையவில்லை. இவ்விருவரையுங் கொண்டு எழுதுவிக்கப் பலர் முயன்றதுமுண்டு. மனம் போனபடியும் கைபோனபடியும் எழுதித் தத்தளிக்க இவர்களுக்கு ஸ்வாதந்த்ர்யவிபிக்ரம மிருந்ததில்லை. தேசிக னுடைய *ஸங்கல்பத்தில் ஸாதுசேஷிக்யாதி ஸ்ரீஸூக்திரத்னத்தில் ஆறுவது விசேஷணத்திற்கு அறும்பெருங்கொள்கலமான இவரொருவரே பயமிற்று அஜ்ஞர்த ஸ்வாதந்த்ர்யவிபிக்ரமர். இவ்வப்ரபந்த இவ்ய சாஸ்த்ரத்தில் ப்ரவேச லேசமாவது (அல்லது) அபிநிவேசலேசமாவது இவர் உடையவராயிருந்து இத்தகைய விஷயங்களில் எழுத முன்வந்தாரானால் நன்றே. இவ்வப்ரபந்த த்வேஷமே உபாதானமாக ஜனித்தவரிவர். அது மட்டுமல்ல; தேசிகத்வேஷ மும் உபாதானமென்னத்தட்டில்லை. திருக்குடந்தை ஆராவமுதய்யங்கார் 1952ல் வெளியிட்ட தேசிகபக்திதத்வமென்கிற 24 பக்கங்கொண்ட நூலில் இவர் தேசிக ஸூக்தி தூஷணம் செய்திருப்பதைக் கண்ணாடிபோல் காட்டியிருக்க வில்லையா? இவர் வாஸ்ஸேஹதாவிசாரத்தில் தத்வடீகாஸூக்தியொன்றை உதாஹரித்து "அத்ர அந்வயேவ பஹு அஸாமஞ்ஜஸ்யம்" என்று எழுதியிருப் பது பேர்க்கவும் போரதுதன்றோ. இந்த ப்ரஸ்தாவத்தில் இவர் ஸ்ருச்சிகதஸ்ட மவிந்துரசவத் இருந்து வருகிறாரே யொழிய 'காணவது தேசிகஸூக்திவைய ஆஷிக்கவாவது' என்று வாய்திறக்கவும் மாட்டிற்றிலரே. ஆக, இவரெழுதும் த்வேஷமும் தூஷணருசியும் இவர்பக்கலிலேயே கிரம்பியுள்ளதென்று பறை சாற்றத்தட்டில்லை. இதைப்பற்றி அறிஞர்கள் மிக விமர்சிப்பது.

## விரஞ்க்ருத்நகாத விக்கமந்தோ!

11. "ஸப்ரதானமானது ப்ரபந்தம். அந்த ரஸத்தை க்ரமமாக அநுப விப்பதற்காகப் பல சிறுபாட்டுக்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது" என்கிறீர். "ப்ருஷ்டதாடகாத் தந்தபங்க:" என்பதே நினைவுக்கு வருகிறதிங்கு. "பக்தி ப்ரபாவ பவதத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணயஸார ரஸௌகபூர்ண:" என்று கூரத்தாழ்வான் ஸாதித்ததை அநுவதிப்பதற்கும் நீர் அநர்ஹர். என்ன ரஸங்கண்டு என்ன அநுபவித்தீர் நீர், நீரஸமாயும் விபரீதரஸமாயும் உரை யெழுதியுள்ளீர். எதிலெனவேயுள்ள பதவுரையைக் களவாடி யெழுதியிருப்பது தவிர ஓரிடத்திலாவது ஒரு ரஸாநுபவம் காட்டினதுண்டோ? திறக. ரஸத்தை யநுபவிப்பதற்கும் பல பாட்டுக்களாகப் பிரிப்பதற்கும் என்ன ஸம்பந்தம் கண் டீர்? திருவரங்கக் கலம்பகத்தில் புயவகுப்புப் பாட்டொன்று—"நகுகதிர் வழங்கு தகடுபடு செம்பொன் வைமணி குயின்ற தொடியணியணிந்த கதன விலிடு நீல வெற்பொத்திருந்தன" என்று தொடங்கி "அழகிய மணவாளர் கொற்றப்புயங்களே" என்று தலைக்கட்டுகிறது. இது பதினறடி வேங்கைப் புலியென்று குலாவப்படுகிறது. நாற்பத்தெட்டு சீரசிரிய வண்ணவிருத்தமிது. இத்தனை பெரிதும் இத்தனை ரஸகனமுமான பாட்டு துர்லபம். ரஸாநுபவத

திற்காக இதனைப் பல சிறுபாட்டுக்களாக யாரும் பிரித்திலர். பாட்டின் கட்டுப்பாட்டைக் குலைக்க யாருக்குமதிகாரமில்லை. "ரஸாநுபவத்திற்காகப் பல சிறு பாட்டுக்களாகப் பிரிப்ப'தென்று அபூர்வமாக நீர் எழுதியுள்ளதைக் காணக்காண விலவறச் சிரிக்கவேண்டியது தவிர வேறொன்றுமில்லைகாணீர்.

## ராஸபத்தின் கதையொன்று மிகவற்புதமானது!

12. ரஸப்ரதாநமென்றும் ரஸாநுபவமென்றும் பேசுவதற்கோ எழுதுவதற்கோ அரஸிக சக்ரவர்த்தியா முன்வருவது! ராஸபமொன்று த்ராக்ஷைத் தோட்டத்தில் புகுந்தது; அங்கு அபரிமிதமான பழங்கள் பழுத்துத் தொங்குகின்றன. காவலாளர் யாருமில்லை. உள்ளே புகுந்த ராஸபம் த்ராக்ஷைக் கனிகளை மேய்ந்துகொண்டிருக்கின்றது. இதையொரு வழிப்போக்கன் கண்டு ஸஹியாமல் கல்லையும் தடியையும் வீசிக் கழுதைமேலெறிகின்றான். இதை மற்றொரு வழிப்போக்கன் கண்டு 'அப்பா இந்தத் தோட்டம் உன்னுடையதன்றே! இதில் கழுதை மேய்ந்ததனால் உனக்கென்ன கஷ்டம்? எதுக்கு வீணாக அதையடிக்கிறாய் நீ? உனக்கு வேணுமாகில் நீயும் உள்ளே புகுந்து யதேஷ்டமாகப் பழங்களைப் பறித்து உண்ணலாமே; அதற்கொன்றும் தடையில்லையே' என்றான். அதற்கு விடை கூறுகின்றான் கேளீர்:—

"யத்யபி ந காபி ஹாநி: பரகீயாம் சரதி ராஸபே த்ராக்ஷாம்
அநுசிதமிதமிதி மத்வா ஹா ஹா ஹா ஹேதி [illegible]தே சேத:"

என்றான். அப்பா! இந்த திராக்ஷைத் தோட்டம் என்னுடையதன்று, என்னைச் சேர்ந்தவர்களுடையதுமன்று; எவனோவொருவனுடையதுதான். ஆனாலும் மேய்கின்ற கழுதையானது திராக்ஷையின் ரஸத்தை சிறிதுமறியாதது. தமட்டங்காய் தின்பதற்கும் திராக்ஷையை புண்பதற்கும் சிறிதும் வாசியறியாதது. 'இன்று நமக்கு திராக்ஷை கிடைத்துவிட்டதே' என்று களிக்கவறியாதது. இப்படிப்பட்ட ஜந்து உள்ளே புகுந்து தின்பதனால் இதற்கொரு லாபமுமில்லை; தோட்டமுடையவனுக்கோ கஷ்டம். அதைப்பற்றி எனக்குச் சிந்தையில்லை. த்ராக்ஷாபுக்திக்கு இட்டுப் பிறவாத ஜந்து அதனை புஜிப்பது மிகமிக அநுசிதமல்லவா? ஆக அத்யந்தம் அநுசிதமான இச்செய்கையைக் கண்டு நான் எங்ஙனே ஸஹித்து வாளாவிருப்பேன்? என்றான். அதுகேட்ட அவன் யுக்தம் யுக்தமென்று தலைதுலுக்கி, தானும் அந்த ராஸபத்தை அடித் தோட்டப் புகுந்தானாம். இக் கதையை நெஞ்சில் நன்கு கொள்வீராக. திருமடலில் இன்சுவையுள்ளதென்று கூறுவதற்கும் அதை யநுபவிப்பதாக ப்ரஸ்தாவிப்பதற்கும் அந்தோ! அதிகாரிகளில்லையா? ஸஹ்ருதயரான D.R. போல்வார் இங்ஙனே யெழுதினால் இதை க்ஷேபிக்கவருவாருண்டோ? இவ்வப் பிரபந்தத்தில், தத்ராபி திருமடலில் ரஸவிவேகமுமறிவில்லாதவர்கள் ரஸ

ப்ரதானமானதென்றும் ரஸத்தை க்ரமமாக அநுபவிப்பதற்காக வென்றும் எழுதினால் அந்தோ! இதனில் மிக்க அஸஹ்யமொன்றுளதோ? "கோமாயூகாம் கோகிலயூகாமபி சப்தேஷு ஏகாகாரா மாநஸவ்ருத்திர் மஹிஷாணாம்" என்கிற வேங்கடாத்வரி ஸுபாஷிதத்தை அடிக்கடி நினைக்கச் செய்துவருகின்றீர்.

## இவர் செய்திருக்கும் சித்ரவதங்கள்

13. அப்யுபகம்ய வாதமே செய்வோம். "செந்துவர்வாய் வாரார்வன முலையாள் வைதேவி காரணமா. ஏரார் தடந்தோளி ராவணனை. ஈரைந்து சிரார் சிரமறுத்துச் செற்றுகந்த செங்கண்மால்," என்பது *(சிறிய திருமடலில்) ஒரு வாக்கியம். இது *மின்னிடைச் சீதை பொருட்டா இலங்கையர் மன்னன் மணி முடி பத்து மறுத்த கதையைச் சொல்லி ரஸாநுபவம் செய்விப்பது இந்த வாக்கியத்தை நீர் எவ்விதமாகக் கொலை பண்ணியிருக்கிறீர் தெரியுமோ? அந்த அநியாயமான கொலையைக் காட்டுகிறேன், கண்ணுடையார் காண்க. "செந்துவர் வாய் வாரார் வன முலையாள் வைதேவி காரணமா, ஏரார் தடந்தோளி ராவணனை" என்பதை இப்பகுதியில் சேர்க்காமலே விட்டுத் தொலைத்தீர். "போரார் நெடுவேலோன் பொன் பெயரோனாகத்தை கூரார்ந்த வள்ளுகிரால் கீண்டு" என்கிற நரஸிம்ஹாவதார கதைப்பகுதியை மிகவும் விருத்த ராவண வத கதைப்பகுதியிலே சேர்த்துக்கொண்டீர். அந்த நரஸிம்ஹாவதார கதையையும் ஒழுங்குபாடாக வைத்திடாமல் அவ்வவதாரம் போலவே உடல் வேறு தலை வேறாக்கி "குடல்மாலை சீரார் திருமார்பின்மேல் கட்டி" இத்யாதியைத் தனிப்படுத்திவைத்தீர். இத்தகைய சித்ரவதங்களுக்குப் பலன் கிடைக்காமற் போகுமென்று நினைக்கிறீர்? கைமேல் கிடைக்கும் காணீர்.

## எல்லாம் விபரீதமேயாகக் கோரமாதவம் செய்த பெருமை

**14.** முடிவாக எழுதியுள்ளீர்;—"சிறிய திருமடலின் முடிவில் கம்பர் இயற்றியதாகக் கருதப்படும் பாட்டு ஒன்று காணப்படுகின்றது" என்று. இதனால் உமக்குப் புஸ்தகபாடமொழிய அநுஸந்தான கந்தமுமில்லையென்பது நன்கு விளங்கிற்று. "பாட்டொன்று அநுஸந்திக்கப்பட்டு வருகின்றது" என்றன்றோ எழுதப்ராப்தம். காணப்படுகின்ற தென்றெழுத ஸம்ப்ரதாய ரஸிகனொருவன் முன்வருவனோ? இப்பாட்டை நீர் தொடவேண்டிய அவசியந் தானுமில்லையே. சிறிய திருமடல் நாற்பது பாட்டென்று பிரித்துக் காட்ட வந்தீர். வந்த காரியம் அழகாக முடிவுபெற்றது. இதற்குமேல் கம்பர் பாட்டைப்பற்றி என்ன விசாரமுமக்கு? இதில் "அன்றோங்கி நின்றளந்தான்" என்கிற ஸர்வஸம்ப்ரதிபந்ந நிரவத்ய பாடத்தை விலக்கி 'அன்றோங்க நின்றளந்தான்' என்றொரு புதிய பாடத்தைக் கொண்டு புகுத்தினீர். 'உலகமெல்லாம் வாழ்வதற்காக' என்று அதற்கு அபார்த்தமு மெழுதினீர். 'ஓங்கி யுலகு

எந்த' என்பதை 'ஓங்கவுலகளந்த' என்பீர் போலும். ஈற்றடியில் 'மன்றேங்க' என்றிருப்பதனால் மூன்றாமடியில் 'அன்றேங்க' என்றுதானிருக்க வேணுமென்ன வருவீர். குருகுல விருகதையினாலாகும் கோணல்களுக்குக் கங்கு கரையுண்டோ? அந்தக ஸ்வாமியென்றொருவரிருந்தார். அவர் திருப்பாவை வியாக்யான மொன்றெழுதினார். பிறப்பே தொடங்கி அந்தகராகையால் மூலமும் உரையும் மனம்போனபடி யெழுதிவைத்தார். உமது நிலைமையுமதுவேயோ? ஒரு பதிப்பிலாவது, ஒருவருடைய அநுஸந்தானத்திலாவது "அன்றேங்கு நின்றளந்தான்" என்பதுண்டோ? எல்லாம் விபரீதமேயாகக் கோரமாதவம் செய்தீர்போலும்.

## பிழைதிருத்தமொரு கேடா?

15. இப்போது நாம் ஆராய்ச்சி செய்யும் ஸஞ்சிகையில் **திருத்தங்கள்** என்கிற தலைப்பின்கீழ் ஒரு திருத்தம் வெளியிடப்பட்டுள்ளது. (அதாவது) "சென்ற ஸஞ்சிகையில் நீரார் நெடுங்கயற்றை என்பதை நீரார்நெடுங்கயத்தை என்று திருத்தி வாசிக்கவேணும்" என்றுள்ளது. 'காடிக்குப் பிடித்தவிடமெல்லாம் மயிர்' என்பதுபோல, தொட்ட தொட்டவிடமெல்லாம் பிழையே வடிவெடுத்த பதிப்புக்குப் பிழைதிருத்தமொரு கேடா? அச்சுப் பிழையா? புத்திப் பிழையா? கீழே "நீராமிது செய்தீரென்றோர் நெடுங்கயிற்றால்" என்றிருப்பதால் அந்த வாஸனை கொண்டு (நெடுங்கயற்றை) என்றெழுதி விட்டார்.

## மிகவும் சோசநீயங்களான மருள்கள்

16. இந்த ஸஞ்சிகையில் உமது வியாஸம் தொடங்குகையில் **ஈறைந்து** என்பதே முதலது. ஈறு—கடைசியிலேயுள்ள, ஐந்து என்றே இதற்குப் பொருளாகும். பத்து என்னும் பொருள் வேணுமானால் 'ஈரைந்து' என்றிருக்க வேணும். அடுத்தது (சீரா) என்பது. (சீரார்) என்றதன் அச்சுப் பிழையீது என்று இசையலாம். உடனே (செற்றுகந்த) என்பதற்கு (சென்றுகந்த) என்றெழுதியுள்ளீர். இனி (பொன்பெயரோன்) என்றதற்கு அற்புதமான விசேஷவுரை வகுத்துள்ளீர். (அதாவது) "பொன்னின் பெயர் ஹிரண்யம் என்ற சொல். அதைத் தனக்குப் பெயராகவுடையவன் பொன் பெயரோன். அன்ன நடையாள் என்பது போன்ற சொல் இது. லக்ஷித லக்ஷணைக்கு இங்கு இடமில்லை" என்றெழுதியுள்ளீர். லக்ஷிதலக்ஷணை யென்கைக்குச் சார்பான விவரணத்தைக் காட்டிவிட்டு அஸம்பத்தமாகத் தலைக்கட்டுகிறீர். அன்ன நடையாளுக்கு இங்கு ஸ்மரணப்ரஸக்தியே கிடையாது. அன்னப்பறவையின் நடை போன்ற நடையை யுடையவள் என்பது அதன் பொருள். உவமையை உட்கொண்டது அது. பொன் பெயரோன் என்பதில் உவமை கிடையாது. பொன் என்றதனாலே ஹிரண்யத்தை லக்ஷித்து அதனால் அப்பெயருடைய அஸுரனைக் கொள்ள வேண்டியதாயிற்று. பூதத்தாழ்வார் "கூந்தல்வாய்கீண்டானை"

என்றார். கூந்தலென்றதனாலே கேசத்தை லக்ஷித்து அதனால் கேசியென்னு மஸுரனைக் கொள்வது போலவே யிதுவும். வில்லிபுத்தூரார் பாரதத்தில் "திங்கள் சேர் பெயரினான்" என்று புத்திஸேனன் குறிக்கப்படுகிறான். திங்க ளென்று மதியை நினைத்து, அதிலிருந்து புத்தியை நினைத்து அது சேர்ந்த பெயரையுடையனாக புத்திஸேனன் கொள்ளப்பட்டான். லக்ஷிதலக்ஷணாஸ்தலங்களில் கிஞ்சித் வ்யவதானம் சிலவிடத்தும் அதிகவ்யவதானம் சிலவிடத்து முண்டு. தைத்திரீயஸம்ஹிதை முதல் காண்டம் எட்டாவது ப்ரச்னத்தில் "**ஸஹ ஸ்வஸ்ரா அம்பிகயா**" என்று ருத்ரனை நோக்கிச் சொல்லப்படுகிறது. ருத்ரனுக்கு அம்பிகை எப்படி ஸ்வஸா? என்று விசாரம். ஸ்வஸா என்று பகினியை நினைப்பூட்டி, பகினியென்பதற்கு ஸௌபாக்யவதியென்று பொருள் என்றார் ஒரு பாஷ்யகாரர். பொன் போன்ற வடிவு படைத்ததனால் ஹிரண்யகசிபுவென்று பெயராயிற்றென்று உமது நினைவு. ஆழ்வார் 'பொன்வடிவன்' என்று ஸாதித்திருக்கவில்லை. 'பொன் பெயரோன்' என்றே இங்கு ஸாதித்துள்ளார். பொன் என்பது அவனுக்கு பேரே பெயரன்று. ஹிரண்யத்தை நினைப்பூட்டிய பெயராகத்தக்கது. ஆகவே லக்ஷித லக்ஷணையென்னத் தட்டில்லை. வினைக ப்ரதிகலப்யமாகவேணுமோ? இப்படியுமா ஒரு தலைவிதி யிருக்கும்!

## அபத்த பஞ்சாங்கத்திற்கு அறுபது நாழிகையும் த்யாஜ்யம்

17. "இனி இருபத்தொன்றும் பாட்டு" என்கிறீர். அந்தோ! இதென்ன தலைவேதனை? எல்லாம் விச்வாமித்ர ஸ்ருஷ்டியா? "மூவுருவும் கண்டபோது ஒன்றாஞ்சோதி" (திருநெடுந்தாண்டகம்) என்றவிடத்து 'ஒன்று ஆஞ்சோதி' என்று பதவிபாகம். பதினோராம் பாட்டு, இருபத்தோராம் பாட்டு, முப்பத்தோராம் பாட்டு என்னும் வழுவற்ற முறையறியகில்லீர். பஞ்சம: ஸப்தம: இத்யாதிகள் போலே ஷஷ்ட: என்பாருமுளரே. கிடக்கட்டுமிது. "செங்குருதிச் சோரக்கிடந்தானை" என்கிறீர். உணர்த்தினாலு முணர மாட்டாதவர்களை யுணர்த்திப் பயனென்கொல்? "உழைக்கோர் புள்ளி மிகை யன்று கண்டாய்."—"அன்றியும் பேர்வாமனாகிய காலத்து" என்றொரு பத்தை யெழுதி இதுவொரு பாட்டென்கிறீர். இருமடல் ஓரிடத்தும் வெண்டளை பிறழாதது. "பேர்வாமனாகிய" என்றால் தளை பிறழ்வதோடு சீரும் ஐந்தாகும். வாமனன் என்கிற பொருளில் வாமன் என்று ப்ரயோகம். பெரிய திருவந்தாதியில் "சீராற் பிறந்து சிறப்பால் வளராது, பேர்வாமனாகாக்கால் பேராளா" என்றார் நம்மாழ்வார். அதையடியொற்றியே யிவர் "பேர்வாமனாகிய காலத்து" என்றார். இதையறியப் பெறாதது உமக்கு வியப்பன்று, உம்மைச் சுட்டி உலகுக்குத் தெரிவித்தபடி. "வாமனன் ஸேவைக்காக இங்குப் பாட்டு முடிகின்றதென்பது ஸ்பஷ்டம்" என்கிறீர். இப்படியே பல்காலு மெழுதி வருகிறீர். சிரிப்பதா அழுவதா? வாமனன் ஸேவை இவ்வளவோடு முடிந்துவிடவில்லையே. *மூவடிமண் தாராயெனக்கென்று வேண்டிச் சலத்தினால் நீரேற்று* என்னு

மனவும் வாமனஸேவையுள்ளதே. அடுத்த பஞ்சாங்கத்திற்கு அறுபது நாழிகை யும் த்யாஜ்ய மென்கிற வசனம் உடம்பெழுத்துக்கே ஏற்கும். 'மூன்றுமடியை மஹாபலியின் தலையில் வைத்தானாகையால் உலகெல்லாம் நின்று மாவலியை யளந்தா னென்பது சேரும்" என்கிறீர். "ந த்யூதமேதத் இதவ! க்ரீடநம் நிசிதைதச் சரை:" என்றல்லது வேறொன்றும் சொல்லத் தோன்றவில்லை. யந்தோ. மாவலியின் தலையில் மூன்றுமடியை வைத்ததாக ஓராழ்வாரும் பணித்தி இலர். "மாவலியைச் சிறையில் வைத்த" என்றே கூறுகின்றனர். கச்சியூர கத்தில் மாவலி திருவடியைத் தாங்கி நின்று காட்சி தருவதுண்டு. அதற்கு இங்கென்ன ப்ரஸக்தி? மாவலியையளந்தானென்கிற அந்வயமும் அபார்த்தமும் யாரிடம் கேட்டீர்? நம்மைக் கேட்பாரில்லையென்று கருதியிருக்கிறீர்?

## ஆசார்யர் என்தாயார் திருவடிகளையடைந்தாரென்னுங் கதை

18. "அவன் திருத்துழாய்த் தாரார்ந்தமார்வனைப் நித்யஸூரிகளுக்கு ஸேவை செய்துகொண்டிருக்க யானை ஓலமிட்டது" என்கிறீர். அந்தோ! இப் படியும் ஒரு விவேக பாரிஜாதம் வளர்வதே! நித்யஸூரிகள் பெருமானுக்கு ஸேவை செய்துகொண்டிருந்தார்களா? பெருமாள் நித்யஸூரிகளுக்கு ஸேவை செய்துகொண்டிருந்தாரா? "என் தாயார் ஆசாரியன் திருவடிகளை யடைந் தார்" என்பதற்கு "ஆசாரியர் என் தாயார் திருவடிகளை யடைந்தார்" என் றெழுதின மூஸலகிஸலயமதிக்கு கிம்கநிஷ்ட: கிமுஜ்யேஷ்ட:? ஸேவையளிப் பதையும் ஸேவை செய்வதையும் பர்யாயமாக நினைக்கிற ப்ரஜ்ஞாவிசேஷம் மிக மிகப் பாராட்டத்தக்கது. இவர்தாம் மருண்டாரென்றால் ஸ்ரீரங்கப்பிரியா ப்ரவர்த்தகர்களுமா மருளவேண்டும் அந்தோ! "அம்மாமி! கூழ்பிட்டிக்கிறது" என்றானாம் மருமகப்பிள்ளை. கூழ் தித்திக்கிறது என்று சொல்லவறியாத பேதை மைக்குச் சிரிக்கின்ற மாமியார் 'மாப்பிள்ளை வாய் பொட்டமாயிருக்கிறது' என் றாளாம். ஸ்பஷ்டமாயிருக்கிறதென்று சொல்லவறியாத இவளும் மாப்பிள்ளை யும் ஒரேவகுப்புத்தான் என்று சொல்லிச் சிரிக்க நினைத்த மாமனார் 'டண்டும் டண்டே' என்றாராம். 'இரண்டு பேர்களும் ஸ்பஷ்ட வாக்குக்களே' என்று அதற்கு அர்த்தமாம். இக்கதையாய் உங்களுடைய கோஷ்டியில் விவேக சக்தி புகுவதற்கே அஞ்சுகின்றது காணீர். இங்கு எழுதுகின்றீர்—"இந்த அவதாரத்தில் ஸமுத்ரத்தில் அணைகட்டுவதற்காக வானரவீரர்கள் மலைகளைத் தூக்கினார்கள்; அடுத்த அவதாரத்தில் தானே மலையைத் தூக்கினானதலால் இதைப் பிறகு வர்ணித்தான்" என்று. அந்தோ! இஃதென்ன தலைவேத னைப்பொருள். வானரவீரர்கள் கற்களை எடுத்தெடுத் தெறிந்தொழிய ஒரு வானரமும் மலையை யெடுத்துத் தாங்கி நின்றதில்லை. "கொடியேறு செந்தா மரைக் கைவிரல்கள் கோலமுமழிந்தில வாடிற்றில, வடிவேறு திருவுகிர் நொந் துமில" என்று ஆழ்வார்களும், "க்ஷோணித்ரம் புரமபச் சலப்தாத்ரம...... அம்லானா நாத! ததாபி பாணயஸ் தே" என்று ஆழ்வானும் ஈடுபடுகின்ற

இவனுடைய பர்வதோத்தாண சரிதைக்கும் வானரசேஷ்டைக்கும் அந்தோ! என்ன சேர்த்தி? "விஜ்ஞப்யஸ்ய வேலாயாம் அஹமாமலகஸ்தநீ" என்றவனுக்கு "வேதாந்த்யயந வேலாயாம் வார்த்தாக வ்ருஷணு வயம்" என்று மஹாரஸிகஜாமாதா விடைகூறின கதையாகவன்றோ விருக்கிறது. "பருகு நீருடுக்குங் கூறையும் பாவஞ் செய்தன தான் கொலோ" என்றுப்போலே ஒன்று சொல்லியே தீரவேண்டியிருக்கிறது. 'திருமடல் உமது கையில் சிக்கி வருந்த என்ன பாவம் பண்ணிற்றோ?' உமது விஷ வாக்குகளைக் கண்டால் ஸத்யமாய் மஹாபாதகமுமுண்டு.

**19.** இனி மண்டுகப்லுதியில் செல்லுவோம். "அநுலோம ப்ரதிலோம க்ரமமாக எம்பெருமானவதாரங்களை யநுபவிப்பது ஆழ்வார்களின் இயல்பு" என்கிறீர். இப்படியும் ஒரு வாக்யமெழுதக் கற்றீரே. அருளிச்செயற்கடலில் அல்லும் பகலும் ஆழ மூழ்கினவர்களுக்கும் நிலமல்லாத விஷயங்களில் வீணே தலையிட்டு வெறுங்க திற்கின்றீரந்தோ! அநுலோமப் பிரதிலோம மென்கிற அசட்டு வார்த்தைக்கு நல்ல இடம் தேடினீர். பொய்கையார் "இடந்தது பூமி யெடுத்தது குன்றம், கடந்தது கஞ்சனை முன்னஞ்சக்கிடந்ததுவும் நீரோதமாகடலே நின்றதுவும் வேங்கடமே" என்றொரு பாசுரத்தில் பல அநுபவங்கள் செய்துள்ளார். இது அநுலோமாநுபவமா? ப்ரதிலோமாநுபவமா? சொல்லிக் காணீர். நீர் எழுதுகிற அஸப்யமான அர்த்தம் கிடக்கட்டும். மூலத்தை எவ்வளவு ரஸாபாஸப்படுத்தியிருக்கின்றீரந்தோ! அந்த அபத்தங்களை யெல்லாமெடுத்துக்காட்டி வீண்போது போக்க விரும்பாமல் சிறிதே காட்டி நிற்கிறேன்; "போரார் வேற்கண்ணீர்" என்பதை 'போரார வேற்கண்ணீர்' என்றது போன்ற பிழைகளை அச்சுப் பிழைகளென்று விட்டுத்தொலைக்கிறேன். புத்திப் பிழைகளையே சிறிது காட்டுகிறேன்.

"மற்றாராலுமல்லனே யென்றொழிந்தான்" என்பதற்கு என்றொழிந்தான்.

"பேராப் பிதற்றாத் திரிதருவன்" என்பதற்கு பிதற்றித் திரிதருவன்.

"ஆரானுமேசுவ ரென்னுமதன்" என்பதற்கு என்றுமதன்.

"நெடுங்கண்கள் ஊராருறங்கிலும் தானுறங்கா" என்பதற்கு உறங்கிலுமுறங்கா. இங்கு இரண்டு அபத்தங்கள்.

மதிட்கச்சிக்கு மதட்கச்சி. மருதிறுத்தானுக்கு மறுதிருத்தான். வெள்ளறைக்கு வெள்ளரை. ஹாஹந்த! அநுவாதேபி பாதகம்.

எழுதுவதோ இவ்வண்ணம். செருக்கோ தலைக்குமேல். விரலுக்குத் தகாத வீக்கம் கூடாதென்பதை இந்த பிராயத்திலுமறியாமை என்னே! கன்றுனும் கருமானும் தங்கவேலை செய்யத் தலைப்படுவதுண்டோ? உமது வகுப்பில் இங்ஙனே ஸாஹஸிப்பார் வேறு யாரேனுமுளரோ? புதிதாகவொருவர் தலைப்பட்டார்.

## மணங்குமணங்கான கற்பூரம் கொளுத்திப் போடவேணும்

20. மிகவும் அநியாயமான மருளொன்று காட்டுகிறேன். இதில் நெஞ்சுவிடுதூதின் தொடக்கத்தில் "வாராய் மடநெஞ்சே வந்து" என்றுள்ளது. இங்கு வந்து என்கிற வினையெச்சமானது யாருடைய வருகையைச் சொல்லுகிற தென்பதைச் சிறுபிள்ளையு மறியக்கூடும். வாராயென்றழைக்கப் பட்ட நெஞ்சின் வருகையைத்தான் அது சொல்லும். 'வாராய் மட நெஞ்சே வந்து' என்றுமனவும் இருபத்தொன்பதாம் பாட்டு முடிந்துவிட்டதாகவும் எழுதியுள்ளீர். பொருளெழுதினவழகோ, "மட நெஞ்சே இங்கே வா; இங்கே யெழுந்தருளி" என்பதாம். உடனே "வந்து என்று சொல்லி அதற்குக் கர்த்தாவான மணிவண்ணனை நினைத்தவுடன் அவ்வுருவம் உள்கண்ணில் தோன்றி அவனுடைய ஆத்மா அதில் லயமடைந்து வாயெழும்பாமல் நின்றுளாகையால் பாட்டு இந்த வினையெச்சத்துடன் முடிகின்றது" என்கிறீர். மணங்கு மணங்கான கற்பூரம் கொளுத்திப் போட்டாலும் நெஞ்செரிச்சல் தொலையாதன்றோ! 'மணிவண்ணன் வந்து' என்று விவக்ஷிதமாகில் 'வாராய் மட நெஞ்சே வந்து' என்று எதற்காகப் பாட்டை முடிப்பது. இப்படிப்பட்ட விபரீதவ்யுத்பத்தி எங்கும் கண்டதில்லையே. நெஞ்சைத் தூது விடும் தலைவி தலைவன் இங்கு வருதலை நெஞ்சாலும் நினையாதிருக்க, வருகைக்குக் கர்த்தாவான மணிவண்ணனென்று அஸம்பத்தமாக ஒருவர் எழுதுவது, அதைப் பலர் மெச்சியச்சிடுவது, அந்தோ! இதென்ன காலக் கொடுமை! "கேள்வி கேழ்க்கக்கூடாது" எனவொன்றெழுதியுள்ளீர். இந்த 1960-ம் ஆண்டிலுமா கேழ்க்க என்று அபத்தமெழுதக் கற்குறுளர்? "அஸ்மாகமுறும் தார்க்கிகேஷாம் அர்த்தர்யேவ, ந து சப்தரி" என்ற கதையாயிருக்கிறதே. சே! சே!! இப்படியுமா ஒரு ஸமூஹம் வம்புவேலை செய்து வருவது! எவரும் எதையும் ஆசைப்பட்டு விடுவதா? "மற்றொரு விதமாகவும் பொருள் கூறலாம்" என்று தொடங்கி யெழுதியுள்ள மூளைகலக்கப் பேச்சுக்களை ஆராய்ந்து இவருடைய கருத்தை விவரிக்க ஸ்ரீ உவே. திருக்குடந்தை கண்ணன் ஸ்வாமியை வேண்டுகிறேன். அவர் ஆராய்ந்து மூளைகலக்க மொன்றுமில்லை யென்கிறாரா? அன்றி மூளை கலங்கினோர்க்குச் செய்யவேண்டுவதைச் செய்விக்க முயல்கிறாரா? என்பதையறிந்துகொள்ள விருப்பம். இங்கு மூலத்தில் "மணிவண்ணன் சீரார் திருத்துழாய்மாலை நமக்கருளித்தாரான் தருமென்றிரண்டத்திலொன்றதனை ஆராலுமொன்றுதார் கேளாதே சொன்னக்கால்" என்றுள்ளது. இதற்கு இவரெழுதியுள்ள தலைவேதனைப் பொருளை விவேகிகள் எடுத்துக் காணவேணும். படித்தவன் எழுதுகிற பங்க்தியா? என்று பரிசீலிக்கவேணும். "......என்ற இவ்விரண்டில் ஒன்றை அவனிடம் கேட்டறிந்து என்னிடம் சொல்லவேண்டியதாகச் சொல்" என்றெழுதியுள்ளார். யார் சொல்லவேண்டியதாக யாரிடம் சொல்ல வேணுமோ தெரியவில்லை. "சொல்லவேண்டியதாகச்

சொல்லும்படி சொல்ல வேணுமென்று சொல்லச் சொல்லு" என்று இவ்வெழுதிக் கொண்டு போனாலும் கேட்பாரில்லையே. இங்ஙனே ஓர் அர்த்தம் வெகு அழகாக எழுதிவிட்டதாய் வைத்துக் கொண்டு 'மற்றொரு விதமாகவும் பொருள் கூறலாம்' என்று காடு பாய்கிறார். ஸாதாரணமான காடன்று; "**மஹாரண்யமரண்யாநீ**" என்கிற பெருங்காட்டில் பாய்ந்து விட்டார்.

"மணிவண்ணனிடம் நீ சென்று தாராய் என்று சொல்; தாராயோ என்று கேள்வி கேழ்க்கக் கூடாது. அவள் எவ்வளவோ கஷ்டப்பட்டிருக்கச் செய்தேயும் நீ இதுவரையில் தாராமலிருந்து விட்டாய்; அதனால் இனியும் தாராய் என்று எங்களுக்குத் தோன்றுகிறது என்று சொல். தரமாட்டாயென்று சொல்வது உசிதமன்றென்று தோன்றினால், தருவாய். இதுகாறும் ஏதோ காரணத்தினால் தாராவிட்டாலும் இனித்தருவாயென்று நினைக்கிறோமென்று சொல். இரண்டுக்குள் ஒன்றுதான் சொல்ல வேண்டியது. தாராயென்று சொன்னால் அதுவே போதும். தருவாயென வேண்டாம். தருவாயென்று சொன்னால் அதுவே போதும்; தாராயென வேண்டாம். தாராயென்று சொன்னதைக் கேட்டு அவன் ஏன் அப்படிச் சொல்லுகிறாய்! அவசியம் தருகின்றேனென்று கூறலாம். அல்லது, ஆம் தாரேன் எனலாம். தருவாய் என்று சொன்னால் அதைக்கேட்டு அவன் ஆம் தருவேன் எனலாம். அல்லது ஏன் தருவேன்? தாவியலாது எனலாம்......"

என்று இங்ஙனே அபூர்வஸப்தபங்கியாக எழுதிக் கொண்டு போகிறார். இதெல்லாம் மூலத்தில் எந்த சொல்லின் பொருளென்று கேட்டால் மூளை கலங்கி விட்டதென்று தானே சொல்லித் தீரும். இதைக் கேட்டுத் தெளிந்து கொள்ளவும், மேற்கொண்டு செய்ய வேண்டியதை முடிவு செய்யவும் நம் திருக்குடந்தை கண்ணன்ஸ்வாமியே கடவர். ... ... ... ... *

# நிகமனம்

"ஆபரிதோஷாத் விதுஷாம்..... ஆத்மந்யப்ரத்யயம் சேத:" என்றார் காளிதாஸ மஹாகவி. பிறருகந்து அபிநந்திப்பதிலுங்காட்டில் மூந்துற முன்னம் தன்மனமுகந்து கொள்வது தலைசிறக்கும். இதுதான் ஆத்மஸந்துஷ்டி என்பது. குறளாசிரியர் "சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை, வெல்லுஞ்சொல் இன்மையறிந்து" என்று (சொல்வன்மையதிகாரத்தில்) ஒரு குறள் கூறினார். பிறர் கண்டிக்க இடமில்லாதபடி பேசவேணுமென்று இக்குறளுக்குச் சிலர் பொருள் கூறினர். இதுவன்று பொருள். 'பிறிதோர் சொல்' என்றுள்ளதேயன்றிப் 'பிறர் சொல்' என்றில்லை. தான் சொல்லிற்றையுமெழுதிற்றையும் தானேயுற்று நோக்கினால் தன் மனத்திற்கே தவறுகள் தெரியவரும். பிறர் தவறு கூறுவது கிடக்கட்டும். தன் மனத்தில் தவறு தோன்றாதபடியிருத்தல் வேண்டும். ஆகவே பிறருடைய அபிநந்தனம் போல் ஸ்வாத்மாபிநந்தனமும் மிக முக்கியம். யசோதைப் பிராட்டி இரண்டையுங் கூறினாள். "என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள் என்னும் வார்த்தை யெய்துவித்த இருடிகேசா!" என்று பிறருடைய அபிநந்தனத்தைச் சொன்னதுபோலவே "காலிப் பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்து காணீர், ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர்! நானே மற்றாருமில்லை" என்று தன்னுடைய அபிநந்த

னத்தையும் சொல்லியுகந்தாள். இவ்விரண்டில் ஒரு வகையான அபிசந்தனமும் பெறுவீர்தாம். ஆனால் *ஸர்வ: காந்தமாத்மீயம் பச்யதியுமுண்டே.

முடிவில் ஒரேவார்த்தை சொல்லித் தலைக்கட்டுகின்றேன். கீர்த்தி மூர்த்தியாய் கோஷ்டிபுரம் ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான திருக்கோட்டியூர் ஸௌம்ய நாராயணாசார்யஸ்வாமி யெழுந்தருளியிருந்த காலத்திலேயே அடியேனுடைய நூற்றுக்கணக்கான விமர்சங்கள் வெளிவந்தவையுண்டு; அவற்றையெல்லாம் அந்த ஸ்வாமி கடாக்ஷித்தருளி என்ன ஸாதிப்பது வழக்கமென்றால், "ப்ருஹஸ்பதியே நேராக வந்தாலும் தேவரீருடைய விமர்சங்களில் ஒன்றையும் கண்ணழிக்க முடியாதென்பது தத்துவம். "சோதார்த்த உக்ஷாவமர்தாத்" "லவணவணிஜ: கர்ப்பூரார்க்கம்" "நிர்வாஹஸ் ஸ்தாப ஸாராத் க்ஷிபதி ஹகடதே" "கர்ணம்ருதைகஸ் ஸ்துதிசதைரநவாப்த பூர்வம்" "வழங்கியுங்கான் மிக விளங்கும்" இத்யாதி பல ஸ்தலங்களில் தேவரீருடைய விமர்சங்களை வைதிகரும் மெச்சியே தீரவேண்டும். தேசிக திவ்யஸூக்திகளிலேயே இரவும் பகலும் போதுபோக்கி வருபவர்களாகச் சொல்லிக்கொள்பவர்களில் ஒருவராவது இத்தகைய ஆராய்ச்சிகளில் ஏகதேசமாவது செய்திருப்பதுண்டோ? தாங்கள் செய்யாவிட்டாலும் செய்திருப்பதன் சுவடறிந்து எதிர்பார்க்கவும் வருகிறார்களென்றால் இவர்களைப்பற்றி என்ன சொல்லுவது? ஔசித்யம் அதிசயித்தும் அநௌசித்யம் சிறிதுமில்லாமலுமுள்ள விமர்சங்களை ஆக்ஷேபிக்க முன்வருவது அஸூயாகார்யமேயென்பதில் ஸந்தேஹமென்ன? ஆனால், ஸம்ப்ரதாயத்தில் உள்ளிறங்கிச் செய்யும் விமர்சங்களில் என்போல்வாருடைய அபிப்ராயத்தை தேவரீர் கேட்கப் புகவேகூடாது; இது வொரு தேவரஹஸ்யம் என்று கொள்க" என்று ஸாதித்தார், அதை விவரிக்கவும் விவரித்தார். அந்த ஸ்வாமி ப்ராமாணிகமாக விவரித்ததையும் இங்குத் தெரிவிக்கின்றேன். ராமாநுஜதயாபாத்ரத்தனியன் நவீநகல்பிதம், அதைச்சேர்ந்த வாழித்திருநாமம் நவீநகல்பிதம் இத்யாதி விஷயகமான விமர்சங்களைப்பற்றித் தாம் அபிப்ராயம் கொடுக்க முடியாதென்று ஸாதித்து அதன் காரணத்தை யுக்தமாகவே நிரூபித்தார்: "ஸரியோ தப்போ; அநேக வருஷங்களாக எங்கள் வகுப்பில் ஒருவிதமான ஆசாரம் வந்து விட்டது. எங்கள் க்ருஹங்களிலும் எங்களுக்கு ப்ரவேசமுள்ள ஸந்நிதிகளிலும் நாங்கள் வழக்கப்படி ஸேவிப்பதை இனி விட்டுவிட முடியுமா! ஆகவே இதில் என்னபிப்ராயத்தைக் கேளாதீர். பொதுவாக தேவரீருடைய விமர்சங்கள் அபேத்யம் என்று சொல்லுவது ப்ராமாணிகர்களுக்கு அவர்ஜநீயமானது என்று ஸாதித்தார். என்றைக்கோ மறைந்து போனவர்களை ப்ரஸ்தாவித்துப் பெருமை பெறப்பார்க்கிறேனென்று நினைக்கவேண்டா. அந்தரங்க ஸாக்ஷ்யத்தை வஞ்சிக்கவில்லாத அத்தகைய ப்ராமாணிக ப்ராஜ்ஞர்கள் இற்றைக்கும் விளங்காமலில்லையே.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் அளித்த

**உபதேசவிம்சதி**

முற்றிற்று.